


# தமிழினமே
# விழித்தெழு! வீறுகொள்!




நண்பர்கள் கழகம்

விருத்தாசலம்

# தமிழினமே

# விழித்தெழு! வீறுகொள்!!

தந்தை பெரியார் நூற்றாண்டு விழா
பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா
நினைவாக வெளியிடப்பட்டது

நண்பர்கள் கழகம் - விருத்தாசலம்

முதற்பதிப்பு :
1978 செப்டம்பர் 15

தொகுப்பு :
கவிஞர் மணிமொழி

வெளியீடு :
நண்பர்கள் கழகம்

அச்சிட்டது :
செல்வி அச்சகம்,
சென்னை-33.

# காணிக்கை!

தி. மு. கழகம் கண்ட
களங்களில் எல்லாம்
பங்கேற்றுச்
சிறை சென்றும்,
செந்நீர் சிந்தியும்
கழகம் தழைக்கத்
தன் வாழ்வைஅர்ப்பணித்த
தியாகச் செம்மல்

**நா. பா. மணி**

அவர்கட்கு
இந்நூலைக்
காணிக்கையாக்குகிறோம்



# போர்ப் பிரகடனம்

சூரியன் கீழே இறங்கி வந்து ஒவ்வொருவருக்கும் ஒளியை வழங்கிக் கொண்டிருப்பதில்லை. சூரியனின் ஒளியை, தேவைப் படுகிறவர்கள், தேவைப்படுகின்ற காரியங்களுக்காகப் பயன் படுத்திக் கொள்கிறார்கள். அதைப் போலவேதான் இந்தியை எதிர்த்துக் கூறப்பட்ட உரைகள், உணர்ச்சிமிக்க வாசகங் கள், இந்தி வந்தால் தமிழ் எவ்வாறெல்லாம் அழியும், தமிழ் நாடு எப்படியெல்லாம் கெடும், தமிழர்களுடைய வாழ்வு எந்த அளவிற்கு வீழும் என்பது பற்றித் தலைவர்கள் அரும் பெரும் கருத்துக்களையெல்லாம் வழங்கியிருக்கிறார்கள். அந்தக் கருத்துக்களை நாம் நடத்தவிருக்கின்ற எதிர்காலப் போராட் டத்திற்குக் கருவிகளாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

இந்தப் போராட்டம் நண்பர் வீரமணி எடுத்துக் காட்டி யதைப் போல இன்று தொடங்குகிற போராட்டம் அல்ல. ஏறத்தாழ நாற்பதாண்டுகளுக்கு முன்பு—1937—38 ஆம் ஆண்டிலேயே இந்தி எதிர்ப்பு அணி உருவாக்கப்பட்டது. அந்த அணியை உருவாக்கியவர் இந்த மண்டபத்திற்கு அருகிலே கல்லறையிலே உறங்கிக் கொண்டிருக்கிறார்.

தந்தை பெரியார்-பேரறிஞர் அண்ணா ஆகியோர் காலத் தில் புலவர் பெருமக்களாக விளங்கிய நாவலர், பாரதியார் மறைமலை அடிகளார்—இவர்கள் எல்லாம் போர்க் கோலம் பூண்டு, இந்தியை எதிர்க்கப் பேரணியைத் திரட்டினார்கள்.

நாற்பதாண்டுக் காலத்திற்கு முன்னால் அந்தப் போராட் டத்தில் ஆயிரம் பேர் தமிழ் காக்க இந்தியை எதிர்த்துச் சிறை சென்றார்கள் என்ற அந்தப் பழைய வரலாற்றை—நாற்

பதாண்டுக் காலத் தமிழகத்தில் ஏற்பட்டிருக்கிற உணர்ச்சியைக் கணக்கிட்டு இந்தி எதிர்ப்புப் போர் மீண்டும் தமிழகத்தில் தொடங்கப்படுமானல் எத்தனை ஆயிரம் பேர் சிறைக்குச் செல்லத் தயாராக இருப்பார்கள் என்பதை நாம் எண்ணிப் பார்த்துக் கொள்ளலாம்.

# பொறுத்தது போதும் என்றல் பொங்கி எழும் தமிழர்கள் உண்டு!

அருமை நண்பர் செல்வேந்திரன் மிக உருக்கமாக உங்களை யெல்லாம் பார்த்துச் சில வினக்களை விடுத்தார்,

"இவ்வளவு கொடுமை நெருக்கடி நேரத்தில் நடைபெற்றதே; நீங்கள் எல்லாம் பார்த்துக் கொண்டுதானே இருந்தீர்கள்?" என்று உங்களைப் பார்த்துக் கேட்டார்.

பார்த்துக் கொண்டு இருங்கள் என்று சொன்னேம். எனவே பார்த்துக் கொண்டிருந்தீர்கள்.

என்றைக்குப் 'பொறுத்தது போதும் பொங்கி எழுங்கள்' என்று நாம் சொல்கிறேமோ அன்றைக்குப் பொங்கியெழக் கூடிய அந்தத் தியாக மனப்பான்மை உள்ள தமிழர்கள் தமிழகத்தில் செத்து விடவில்லை, அந்த நம்பிக்கையோடுதான் நாம் நம்முடைய இயக்கங்களை நடத்தி வருகிறேம் என்பதை நண்பர் செல்வேந்திரன் மறந்து விடக்கூடாது. அவர் பேச்சில் வழக்கம்போல் வீரம் கொந்தளிப்பதற்குப் பதிலாக— இன்று விரக்தி தொனித்ததைப் பார்த்தேன். அவர் விரக்தியடையத் தேவையில்லை.

ஆயிரமல்ல - இலட்சக்கணக்கான தமிழ்ச் சமுதாய இளைஞர்கள் தங்கள் உயிரைக் கொடுத்து இந்தியை எதிர்க்கத் தயாராக இருக்கிருர்கள்.

ஆயிரம் பேர் சிறைக்குச் சென்ற அந்தக் காலத்தில் இந்தியைக் கட்டாயமாகத் தமிழகத்தில் நுழைத்திடும் பணியைச் செய்தவர் — இந்தியே கூடாது — ஆங்கிலம்தான் இருக்க வேண்டும் Hindi never; English ever என்று பின்னல் சொல்லக்கூடிய அளவிற்குத் தன்னை மாற்றிக்கொண்ட

மூதறிஞர் ராஜாஜி அவர்கள் 1938-ல் சென்னை மாநிலத்தின் பிரதமர் என்கிற பொறுப்பில் இருந்த நேரத்தில் - கட்டாய மாக இந்தியைக் கொண்டு வந்தார்.

அப்போது அவர் சொன்ன காரணம் 'எப்படியும் டெல்லியில் இருப்பவர்களுடைய முயற்சியால் மத்தியில் அமைகிற அரசின் முனைப்பான நடவடிக்கைகளால் இந்தியா முழுமையும் இந்தி பரவத்தான் போகிறது, அப்போது இந்தி படித்தவர்கள்—இந்தியில் பட்டம் பெற்றவர்களுக்குத்தான் வேலை வாய்ப்புகள் கிடைக்கும்; அந்த நேரத்தில் இந்தி படிக்காமல் தமிழர்கள் ஏமாந்துவிட்டால்—பெரும் கேட்டிற்கு ஆளாவார்கள்; ஆகவே இப்போதே தமிழ் நாட்டு மக்களைக் காப்பாற்ற இந்தி படிக்கச் சொல்கிறேன்' என்பதாகும்.

ஆனால் அதே நேரத்தில் இந்தியால் தமிழ் மொழி எந்த அளவிற்குக் கெடும் என்பதை அன்று ராஜாஜி அவர்கள் சிந்திக்கத் தவறினர். அதை உணர்த்தும் வகையில்தான் அன்றைக்கு தமிழர்கள் புல் வில் கயல் என்ற மூன்று சின்னங்களும் பொறித்த கொடியைக்கொண்டு தமிழர் இயக்கத்தை தந்தை பெரியார் அவர்கள் தலைமையில் நடத்திக் காட்டினர்கள்.

நான் அண்மையில் பத்திரிகையில் குறிப்பிட்டுக் காட்டியதைப்போல -அன்றைக்குத் தேசியவாதிகளின் முழக்கம் எல்லாம் "தமிழ் வாழ்க - இந்தி ஒழிக" என்பதல்ல; இந்த முழக்கம் தமிழ் இயக்கத்தின் முழக்கமாக இருந்தது. ஆனல் தேசியவாதிகள் என்று சொல்பவர்களுடைய முழக்கம் எல்லாம் "தமிழ் வாழ்க - இந்தி பரவுக!" என்று இருந்தது. இந்தி பரவிட வேண்டும் என்கிற நோக்கம் அன்றைக்கும் இருந்தது: இன்றைக்கும் இருக்கிறது. ஆனல் இன்றைக்கு அவர்கள் சொல்வதில்லை. செயலில் காட்டிக்கொண்டிருக்கிறர்கள்.

## நமது முழக்கத்தை மாற்ற வேண்டும்

'இந்தியைத் திணிக்க மாட்டோம்; திணிப்பதே இல்லை என்றெல்லாம் ஆயிரக்கணக்கான உறுதிமொழிகளை அள்ளி யள்ளி வீசினலும்கூட—மாநிலங்கள் அவையில் ஆனலும், மக்கள் அவையிலானலும் - இந்திய நாட்டுப் பிரதமர் நேருவானலும், அவருக்குப் பிறகு வந்த சாஸ்திரியானலும், அவருக்குப்பிறகுபொறுப்பேற்ற இந்திராகாந்தியானலும்-இன்றுள்ள மொரார்ஜி தேசாய் ஆனலும் இந்தியைத் திணிக்கமாட்

டோம் என்ற வாக்குறுதியை வழங்குகிறார்களே தவிர இந்தியைப் பரப்புகின்ற முயற்சியில் மிக முனைப்பாகத்தான் இருக்கிறார்கள்.

ஆகவேதான் தஞ்சையில் நடைபெற்ற இலக்கிய அணி கூட்டத்தில் இந்தித் திணிப்பை எதிர்ப்பது என்று இதுவரை சொல்லிக்கொண்டிருந்தோம், ஆனால் இந்தித் திணிப்பு இல்லை என்ற பெயரால் வெவ்வேறு வழிகளில்—ஆனால் எல்லா வழிகளிலும் இந்தி தமிழகத்தில் நுழைக்கப்படுகிறது. எனவே நம் முழக்கத்தை மாற்ற வேண்டும். இந்தித் திணிப்பை எதிர்ப்போம் என்பதை மாற்றி—இந்தியை எதிர்ப்பது என்று முழக்கத்தை மாற்ற வேண்டுமென்று சொன்னேன்.

இந்தியை எதிர்ப்பது என்றால் உத்தரப் பிரதேசத்திற்கும், மத்தியப் பிரதேசத்திற்கும் சென்று அங்கேயிருக்கிற இந்தி மொழியை எதிர்ப்பது என்று பொருளல்ல.

தமிழகத்தில் எந்த முறையில் நுழைந்தாலும் எந்த வழியில் புகுந்தாலும் - அது திணிப்பு என்கிற பெயரால் வந்தால்தான் எதிர்ப்போம் என்றல்ல; எந்தப் பெயரால் வந்தாலும் அதைத் தடுத்து நிறுத்தினால்தான் எதிர்காலச் சமுதாயத்திற்கு நாம் நன்மை செய்தவர்களாவோம். இல்லாவிட்டால் வருங்கால சந்ததி நம்மைச் சபிக்கும்.

அந்தச் சாபத்திற்கு ஆளாகாமல் இருக்க—அவர்கள் நம்முடைய கல்லறையைப்பார்த்து "நீங்கள் வாழ்ந்த காலத்தில் அல்லவா, இந்தி நுழைந்தது, தமிழ் அழிந்தது" என்று அழுது புலம்பாமல் இருக்க நாம் இன்றைக்கே தக்கது செய்தாக வேண்டும். அதற்கு வழி காட்டுகின்ற மாநாடாகத்தான் இந்த மாநாடு அமைந்திருக்கிறது.

1938-ல் ஆயிரம் பேர் சிறைச்சாலை சென்று—பெரியார் பெல்லாரி சிறையில் வைக்கப்பட்டு, அண்ணா அவர்கள் ஆறு மாதம் கடுங்காவல் தண்டனை ஏற்றபிறகு அரசினர் கொஞ்சம் வளைந்து கட்டாய இந்தியில்லை என்ற அளவிற்கு ஆயிற்று.

பின் 1947-ம் ஆண்டு அவிநாசிலிங்கம் அவர்கள் கல்வியமைச்சராகப்பொறுப்பேற்றிருந்த காலத்தில்மீண்டும் இந்தி நுழைக்கப்படுகின்ற நிலைமைகள் உருவாகி—அப்போது நடைபெற்றதுதான் தஞ்சைத் தரணியில் குடந்தை இந்தி எதிர்ப்புப்போராட்டம். அது குறித்து அண்ணா அவர்கள் 'ஆதித்தன் கனவு படமல்ல-பாடம்'' என்ற நீண்ட பெரும் கட்டுரை எழுதினார். இன்று அதைப் படித்தாலும் இந்தி எதிர்ப்பு உணர்ச்சியைத் தமிழ்ப் பெருங்குடி மக்கள் அடைகின்ற அளவிற்கு அந்தக் கட்டுரை அமைந்தது என்பதை நீங்கள் புரிந்து கொள்ள முடியும்.

குடந்தைத் தெருக்களில் குருதி மழை பொழிந்தது. காவல் துறையினர் கழக வீரர்களை—அப்போது படுத்திய பாடு கொஞ்ச நஞ்சமல்ல. பெரியார், அன்னை மணியம்மையார் அண்ணா ஆகியோர் கைது செய்யப்பட்டனர். தஞ்சைத் தரணி அல்லோலகல்லோலப்பட்டது

# அன்று மூண்ட மொழிப் புரட்சி!

அதற்குப் பிறகு 1965-ஆம் ஆண்டில் நம்முடைய 40 ஆண்டுக்கால இந்தி எதிர்ப்புப் போராட்ட வரலாற்றில் உச்சக்கட்டத்தை தமிழகம் கண்டது. 1965 ல் நடைபெற்றது மொழிப் போராட்டம் என்று சொன்னால்—அந்த வாதத்தை முழுமனதாக ஏற்றுக்கொள்ள முடியாது. அதை மொழிப் புரட்சி என்றுதான் சொல்ல வேண்டும்.

மாணவர்கள், தமிழ்ப் புலவர்கள், ஆசிரியர்கள், தன்மான ரத்தம் ஓடுகின்ற தமிழர்கள் ஆங்காங்கு அந்தப் போர்க்களத்தில் குதித்தார்கள். நூற்றுக்கணக்கானவர்கள் சுட்டுக் கொல்லப்பட்டார்கள் மாணவன் சாரங்கபாணி, மாணவன் ராசேந்திரன், அதைப்போலவே தங்களுடைய தேகங்களுக்குத் தீ வைத்துக்கொண்டு-தீப்பற்றி எரிகின்ற நேரத்திலும் ''இந்தி ஒழிக! தமிழ் வாழ்க!'' என்று முழக்கமிட்டார்கள், தமிழர்கள் எண்மர். அப்படித் தீக்குளித்துச் செத்த எட்டுத் தியாக மறவர்களைக்கொண்ட வரலாறு—65-ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போராட்ட வரலாறு.

என்னைப் பொறுத்த வரையில் காலையில் செட்டி நாட்டரசரும், மாலையில் முத்தமிழ்க் காவலரும் எடுத்துக் காட்டியதைப்போல—என்னுடைய அரசியல் பொது வாழ்வின்

நுழைவே இந்தி எதிர்ப்புப் போரோடு கலந்ததாகும். திருவாரூர் பள்ளியில் நான் மாணவனுகப் படித்துக் கொண்டிருந்த 1938-ஆம் ஆண்டிலேயே—பள்ளிக்கூட வாசலில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்ட மறியலில் தமிழ்க் கொடி ஏந்தி இந்தி எதிர்ப்பு அணியில் ஈடுபட்டு இந்தப் பொதுவாழ்க்கைக்கு வந்தவன்.

## கழகம் இல்லாமல் இந்தி எதிர்ப்புக் களமில்லை!

ஆகவே இந்தி எதிர்ப்பு என்பது என்னுடைய ரத்தத்தில் ஊறிப்போன ஒன்று. ஆகவே நான் இல்லாமல் இந்தி எதிர்ப்புப் போராட்டம் இல்லை என்று உரிமைகொண்டாடக் கடமைப்பட்டவன்.

திராவிடர் கழகம் - திராவிட முன்னேற்றக் கழகம் இல்லாமல் இந்தி எதிர்ப்புப் போராட்டம் இல்லை.

இன்று பல கட்சிகள் இந்தியை எதிர்க்கின்ற காட்சியைப் பார்க்கிறோம். ஆனல் அன்று தன்னந்தனியாகப் பெரியாரும் பேரறிஞர் அண்ணுவும் தமிழ் நாட்டில் உள்ள சில புலவர் பெருமக்களும் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை நடத்திய அந்தக் காலத்தை எண்ணிப் பார்க்க வேண்டும்.

இன்று இந்த மேடையில் பல்வேறு கட்சிகளைச் சேர்ந்தவர்கள் இந்தியை 'நாங்கள் எதிர்த்தே தீருவோம்- தமிழ்நாட்டிற்கு—தமிழுக்கு—தமிழர்களுக்கு வருகிற ஆபத்தைத் தடுத்தே திருவோம்'' என்று முழங்குகிற காட்சியைக்காணும் நேரத்தில்—பெரியாரும், அண்ணுவும் அன்றைக்குப் பட்ட பாட்டிற்கு இன்றைக்குக்கிடைத்திருக்கிற மகத்தான வெற்றியாகத்தான் இதைக் கருத வேண்டும்.

தளபதி அழகிரிசாமி திருச்சியிலிருந்து கால்நடையாக மூவலூர் மூதாட்டி ராமாமிர்தம் அம்மையார், மணவை திருமலைசாமி (இவர்களுடைய பெயர் எல்லாம் பல இளைஞர்களுக்குத் தெரியாது. ஏன், இந்தி பற்றி இப்போது பேசுகின்ற பல அரசியல்வாதிகளுக்குக்கூட அந்த இந்தி எதிர்ப்பு வரலாறு புரியாது) மற்றும் நூற்றுக்கணக்கானவர்கள் சென்னைவரை இந்தி எதிர்ப்புப் போராட்டப் பாதயாத்திரை செய்தார்கள்.

வருகிற வழியில் ஒரு கிராமத்தில், அண்ணன் அழகிரி தலைமையில் வந்த பயணம் தடைப்பட வேண்டும் என்ற எண்ணத்தோடு — அன்றைக்கு "தமிழ் வாழ்க இந்தி பரவுக" என்ற முழக்கத்திற்குச் சொந்தக்காரர்களாக இருந்தவர்கள்-செருப்புகளால் தோரணங்களைக் கட்டிவைத்தார்கள்.

அழகிரி அந்தத் தோரணத்தைத் தாண்டி நடைபோடவில்லை. தோரணம் கட்டப்பட்டிருந்த இடத்திலேயே ஒரு முக்காலி கொண்டுவந்து போடச்சொல்லி அதன்மீது ஏறி நின்று ஒரு மணி நேரம் இந்தியை ஏன் எதிர்க்கிறோம் என்பதைப் பற்றிப் பேசினார்.

அவர் பேசி முடித்த பிறகு—யார் அந்தத் தோரணங்களைக் கட்டினார்களோ, அவர்களே அந்தத் தோரணங்களை அவிழ்த்துவிட்டு, அழகிரியின் பட்டாளத்திற்கு விருந்து நடத்தி வழியனுப்பி வைத்தார்கள். அது இந்தி எதிர்ப்புப் போராட்ட வரலாற்றில் ஒரு கட்டம்.

## அன்று எதிர்த்தவர்கள் இன்று நமது அணியில்!

நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். அன்றைக்கு இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை ஏளனம் செய்தவர்கள் -- கேலி செய்தவர்கள் — இன்றைய தினம் ஆமாம் இந்தியால் தமிழ் நாட்டிற்கு ஆபத்துதான் என்று உணர்கின்ற அளவிற்கு நம்மோடு அணிவகுத்து வருகிற சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது என்றால் இந்தித் திணிப்பு எவ்வளவு பயங்கரமானது என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்

தி.க , தி.மு.க, ஆகிய இரண்டு கட்சிகள் மாத்திரமே இந்தி எதிர்ப்பைத் தங்களுக்கு உரிமையாக்கிக் கொள்ள வேண்டுமென்று எண்ணிடாமல், இந்தியை எதிர்க்க ஒரு கட்சி சார்பில் அல்ல; அனைத்துக் கட்சிகளிலும் இருக்கிற தமிழர்கள் அனைவரும் ஒன்று கூடியாக வேண்டும். அந்த நாள் வெகுவிரைவில் வரும். அதற்கு வழிகாட்டக்கூடிய நாள்தான் இந்த நாள்.

ஆகஸ்டு 15 விடுதலை நாள் விழா. இந்தியநாடு விடுதலை பெற்று விழாக் கொண்டாடிக் கொண்டிருக்கிறது. கொண்டாட்டங்களையும், குதூகலங்களையும் பற்றி மாலையில் வானொலியிலும், தொலைக்காட்சியிலும் செய்திகள் எல்லாம் வெகு அழகாகச் சொல்லப்பட்டிருக்கும்.

ஆனால் இந்த விடுதலை நாள் விழாவில் நாம் இங்கே கூடியிருப்பது தமிழுக்கு — தமிழர்களுக்கு இந்தியால் ஏற்பட்டிருக்கின்ற அடிமைத் தளையிலிருந்து எப்போது விடுதலை என்று கேட்கின்ற விடுதலை நாள் விழாதான் இந்த விடுதலை நாள் விழா !

ஏன் இதைச் சொல்கிறேனென்றால், இன்றைக்கு இந்தி படிக்காவிட்டால் என்னவாகும் தெரியுமா? இது தங்களுடைய வாழ்க்கையைப் பற்றி எண்ணுகின்ற — ஒவ்வொரு குடும்பத்தில் இருக்கிற படிக்கிற மாணவர்களுடைய உள்ளத்தில் ஏற்படுகின்ற கேள்வி. இந்தி படித்தால்தான் உங்களுக்கு வேலை கிடைக்கும் என்று சொல்லப்படுகிறது.

மத்திய சர்க்காருடைய நிறுவனங்கள் ஆனாலும் அல்லது மத்திய அரசின் பொதுத்துறை நிறுவனங்களானாலும், வங்கிகளானாலும் அங்கேயெல்லாம் இந்தித் திணிப்பு இல்லை என்கிற திரைக்குப்பின்னால் இருந்து கொண்டு, இந்தி வேக வேகமாகப் பரப்பப்படுகின்ற காட்சியை நாம் பார்க்கின்றோம்.

இன்று காலையில் ஒரு நண்பர் என் இல்லத்தில் — மத்திய அரசுத் துறைகளிலும் — பொதுத் துறையிலும், வங்கிகளிலும் எவ்வளவு வேகமாக இந்தி பரப்பப்படுகிறது என்பதற்கான சான்றுகளையெல்லாம் காட்டினார். அதில் ஒன்றை உங்களுக்குக் குறிப்பிட விரும்புகிறேன்.

இந்தியன் வங்கிக் காசோலையில் இதுவரை ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்த வார்த்தைகளுக்கு மேலாக இந்தியிலேயும் எழுதப்பட்டிருக்கிறது. இதற்கு முன்பு எங்கெங்கு ஆங்கில வார்த்தைகள் இருந்தனவோ அதற்குமேல் எல்லாம் இந்தி வார்த்தைகளும் இப்போது எழுதப்பட்டிருக்கின்றன.

இரண்டு மூன்று திங்களுக்கு முன்னால் சென்னையில் ஒரு புதிய ரெயில் தொடக்கவிழா நடைபெற்றது. மாநில ஆளுநர் தலைமையில் மத்திய அமைச்சர் ஒருவர் அதைத் தொடங்கி வைத்தார். அதற்கான அழைப்பிதழ் எனக்கு அனுப்பப்பட்டிருந்தது. அதில் ஒரு பக்கத்தில், அதாவது பினபக்கத்தில் ஆங்கிலம், முன்பக்கத்தில் இந்தி. அந்த அழைப்பிதழில்- தமிழ்நாட்டுத் தலைநகரில் நடைபெறும் விழாவிற்கான அழைப்பிதழில் தமிழைக் காணோம். இந்தியும், ஆங்கிலமும் இடம் பெற்றிருந்தது. இது எங்கே கொண்டு போய்விடும்? இதை அனுமதித்தால் கொஞ்ச காலத்தில் இந்தி மாத்திரம்தான் அச்சடிக்கப்பட்டிருக்கும். ஆங்கிலம்

இருக்காது. ஆங்கிலம் இருக்கட்டும், இந்திக்குப் பதிலாகத் தமிழில் அச்சடித்திருக்கக்கூடாதா ?

## அந்தத் தண்டவாளத்தைப் பெயர்த்தாக வேண்டும்!

தமிழை அறவே அகற்றிவிட்டு ஆங்கிலத்திலே ஒரு பக்கமும், இந்தியிலே ஒரு பக்கமும் ஒரு புகைவண்டித் தொடக்க விழாவுக்கு அழைப்பிதழை அச்சடித்து அனுப்புகிறார்களென்றால், எவ்வளவு வேகமாக அந்த ரயில்போக வேண்டுமென்று விரும்புகிறார்கள் !

எனவே அந்தத் தண்டவாளத்தைப் பெயர்க்க வேண்டிய வேலை தமிழ்ச் சமுதாயத்தினுடைய வேலையாகும்.

நிருபர்கள் ஜாக்கிரதையாகக் குறிப்பெடுத்துக் கொள்ள வேண்டும். தண்டவாளத்தைப் பெயர்க்கச் சொல்லி கருணாநிதி தமிழர்களைத் தூண்டிவிட்டார் என்ற தலைப்புப் போட்டுவிடக்கூடாது. நான் சொல்கிற தண்டவாளம், இந்தி பரவுவதற்காக அதை ஏற்றிக் கொண்டு வருகிற ரயில் இருக்கிறதே; அந்த ரயில் தண்டவாளத்தைத்தான் குறிப்பிடுகிறேன்.

கி. ஆ. பெ. அவர்கள் எடுத்துச் சொன்னார்கள், சூதாக, மறைமுகமாக இந்தி திணிக்கப்படுகிறது என்று — ஆனால் வெளிப்படையாகவே எந்தவிதப் பயமும் இல்லாமல் எந்த விதமான அச்சத்திற்கும் ஆட்படாமல், ''மாநிலங்களவையிலே இந்திக் கடிதங்களைக் கிழித்தெறிகிறீர்களா பரவாயில்லை; நீங்கள் செய்வதைச் செய்யுங்கள்; நாங்கள் செய்வதைச் செய்தே தீருவோம்'' என்கின்ற அளவுக்கு டில்லிப் பட்டணத்தில் யார் ஆட்சிப் பொறுப்புக்கு வந்தாலும் செயல்பட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

ராஜா வேஷம் போட்ட ஆள்தான் மாறியிருக்கிறாரே தவிர, ராஜா பேசுகிற வசனம் மாறவில்லை.

நேரு இருந்தாலும், லால்பகதூர் சாஸ்திரி இருந்தாலும், இந்திராகாந்தியாயிருந்தாலும், மொரார்ஜிதேசாயாயிருந்தாலும் வேறு யாராகயிருந்தாலும் இந்தி ஆதிக்கத்தின் கீழ்

இந்தியா முழுமையும் வந்தாக வேண்டும் என்றே அவர்கள் நினைக்கிறார்கள்.

அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் இந்தி என்ற மொழியிலிருந்து வந்ததுதான் இந்தியா என்று! நாட்டின் பெயரைச் சொல்கிற போதே அது கேள்விக் குறியாக இருக்கிறது.

# இந்தியா ஒரு கேள்விக் குறி!

இந்தி...யா? என்கின்ற கேள்விக் குறியாக இருக்கின்றது. ஆனால் இந்தி என்கிற மொழியிலிருந்து இந்தியா வரவில்லை.

'இந்து' என்கிற மொழியிலிருந்து இந்தியன் வந்து, அந்த இந்தியன் என்கிற மொழியிலிருந்து இந்தியர்கள் வாழ்கிற நாடு இந்தியா என்று ஆயிற்றே தவிர, ரஷ்ய மொழியைப் பேசுவதால் ரஷ்யா என்று ஆனதைப்போல, ஜெர்மன் மொழியைப் பேசுகிற நாடு ஜெர்மன் நாடு என்று ஆனதைப்போல, தமிழ் மொழி பேசுகிற நாடு தமிழ்நாடு என்று ஆனதைப் போல, இந்தி மொழி இந்தியா முழுவதும் பேசப்படுவதால் இது இந்தியாவாக ஆயிற்று என்று யாரும் வாதிட முடியாது. அதற்கு அடிப்படையே கிடையாது.

ஏனென்றால் 'இந்து' என்பதிலிருந்து 'இந்தியன்' வந்தான். இந்துவே உண்டா? அது ஒரு மதமா? அதைப் பெரியாரைக் கேட்கவேண்டும். அதைப்பற்றி பேசக்கூடிய ஆற்றலும், அதைப் பற்றிக் கருத்துக்களை அளிக்கக் கூடிய தந்தை பெரியார் அவர்கள் 'இந்து' என்றால் யார் என்பதைப் பற்றிப் பல விளக்கங்களைத் தந்துள்ளார். நான் இந்தியைப் பற்றிப் பேசுகிற நேரத்தில் 'இந்து'வுக்குப்போக விரும்பவில்லை. ஏற்கனவே முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. அவர்கள் வேறு ஒரு 'இந்து'வுக்குப் போய்விட்டு வந்துள்ளார். எனவே 'இந்தியா' என்பது 'இந்தி' என்ற மொழியின் அடிப்படையில் வந்தது அல்ல. ஆகவே, இந்தி மொழி இந்தியா முழுமைக்கும் சொந்தமான ஒரு மொழி அல்ல.

இந்தி மொழியை இந்தியா முழுவதும் பரப்ப வேண்டும் என்று எண்ணுகிறார்கள் என்றால், அதற்கு அவர்கள் சொல்கிற ஒரேயொரு காரணம், இந்தியாவினுடைய ஒருமைப்பாடு கெட்டுப் போகாமல் இருக்க வேண்டுமேயானால், இந்தியாவினுடைய ஒற்றுமை குலையாது இருக்க வேண்டுமேயானால்,

அனைவருக்கும் தொடர்பு மொழியாக இந்தி மொழி இருந்தாக வேண்டும் என்று கூறுகிறார்கள்.

நாம் அதே காரணத்தைத்தான் கூறுகிறோம். "இந்தியாவினுடைய ஒருமைப்பாடு காக்கப்பட வேண்டுமேயானால், இந்தியா பல துண்டுகளாக ஆகிவிடாமல் இருக்கவேண்டுமேயானால் இந்தியை நீங்கள் நுழைக்காதீர்கள்'' என்றுதான் சொல்கிறோம். நாம் எடுத்து வைப்பதும் அதே வாதம்தான்.

இந்தி நுழைக்கப்பட்டால்தான், இந்தி பரவினால்தான் இந்தியா ஒன்றாக இருக்கும் என்று சொல்கிறார்கள்.

நான் கூறுகிறேன், அழகான உயர்ந்த கோபுரத்தில் காக்கை எச்சமிடுகிறது. அது அலட்சியப் படுத்தப்பட்டுவிடும். அந்த எச்சத்திலே இருக்கிற விதை முளைக்க ஆரம்பிக்கும். பிறகு வேர்விடும்; மரமாகும். ஒருநாள் கோபுரத்தைப் பார்த்தால் வெடித்துக் கிடக்கும்.

அதைப் போலத்தான் இந்தி என்ற வேர் பரவுமேயானால் இந்திய ஒருமைப்பாடு என்கிற கோபுரம் இடிந்து சுக்குநூறாக ஆகிவிடும் என்பதை இந்திய நாட்டுப் பிரதமருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தியா ஒரே தேசிய இனத்தைக் கொண்ட நாடு அல்ல. பல தேசிய இனங்கள் இந்தியாவிலே இருக்கின்றன. அதிலே தமிழ் இனம், தமிழர் என்ற தேசிய இனம் நமது இனம். நாம் திராவிடர்கள் என்று சொல்லிக் கொள்கிற நேரத்தில் தமிழோடு சேர்ந்த குடும்ப மொழிகளான மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய இந்த மொழிகள் எல்லாம் இணைந்து—இந்தக் குடும்ப மொழியைப் பேசுகின்ற இந்தப் பகுதி திராவிடம். அதில் உள்ளவர்கள் திராவிடர்கள். நாம் இனத்தால் தமிழர்கள். நம்முடைய குடும்ப மொழிகளான—தமிழ், கன்னடம், மலையாளம், தெலுங்கு ஆகிய இந்த நான்கு மொழிகளைப் பேசுவதால் திராவிடர்கள். நாட்டால் இந்தியர்கள்; அவ்வளவுதான். நாம் திராவிடநாடு கேட்டபோதுகூட நான்கு மொழி பேசுகிற திராவிடக் கூட்டாட்சிதான் கேட்டோம்! ஒற்றையாட்சி முறையல்ல என்பதைத் தமிழ் இன மக்கள் மறந்துவிடக் கூடாது.

# அமெரிக்க வரவேற்பு அளித்த பாடம்!

நமது பிரதமர் அண்மையில் அமெரிக்கா சென்ருர். அமெரிக்கா சென்றிருந்தபோது அங்கே பிரதமருக்குக் குஜராத்தி மண்டலின் சார்பாக வரவேற்பளிக்கப்பட்டது. கேரள சமாஜம் சார்பாக வரவேற்பளிக்கப்பட்டது. பஞ்சாப் சங்கத்தின்சார்பாக வரவேற்பளிக்கப்பட்டது. தமிழர் சங்கத் தின் சார்பாக வரவேற்பளிக்கப்பட்டது. அப்போதே பிரதம ருக்குத் தெரிந்திருக்க வேண்டும். இங்கு மொத்த இந்தியர் களின் சார்பாக வரவேற்பளிக்கப்பட வில்லேயே, ஏன்? நாம் அமெரிக்காவுக்கு வந்தாலும் கேரள மக்கள் கேரள சமாஜத் தின்பெயரால், குஜராத்தி மக்கள் குஜராத்தி மண்டலின் பெயரால், தமிழ் மக்கள் தமிழ்ச் சங்கங்களின் பெயரால் வர வேற்பளிக்கிருர்கள். ஆகவே நாம் என்னதான் பூசி மெழுகி இந்தியாவை ஒன்ருக ஆக்கலாம் என்று கருதினுலும்,இந்தியா ஒற்றுமையாக இருக்க வேண்டுமென்று எண்ணினுலும, அந்த ஒற்றுமைக்குள்ளே பல தேசிய இனங்கள் இருக்கின்றன. அதிலே ஒரு இனம் தமிழ் இனம் என்பதை மொரார்ஜி தேசாய் வெளியே சொல்லாவிட்டாலும், அமெரிக்காவிலே நினேத்துப் பார்க்கிற அளவுக்குச் சம்பவங்கள் நடந்திருக் கின்றன.

எனவே நாம் தமிழ் இனம், நாட்டால் இந்தியர்கள். எனவே இந்தி மொழி பரப்பப்பட்டு, மற்ற மொழிகளெல் லாம் அடியோடு அழிக்கப்பட்டு,இந்தி ஆதிக்கம் தலேதூக்குமே யாளுல் அதற்குப் பிறகு நாம் நணபர் குமரி அனந்தன் இங்கே குறிப்பிட்டதைப்போல இரண்டாந்தர மக்களாகக்கூட அல்ல, நாலாந்தர மக்களாக ஆக்கப்பட்டு விடுவோம். அதைத் தயவுசெய்து நீங்கள் மறந்துவிடக் கூடாது.

முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ, அவர்கள்கூட மூன்றே நாளில் இந்தியைப் படித்துவிடலாம், படிப்பது எளிது என்று கூறினுர்கள். படித்தால் என்ன என்றுகூட உங்களுக்கு ஆசை வரலாம். இந்தி படிப்பது எளிது, ஆனுல் படித்தால் அது மிகக் கொடிது. 'எளிது' என்பதற்கும், 'கொடிது' என்பதற்கு முள்ள பொருளே நீங்கள் உணர வேண்டும்.

எளிது என்று படித்து விடுவீர்களேயாளுல், மும்மொழித் திட்டத்தை ஏற்றுக் கொள்கின்ற எந்த ஒரு மாநிலமும் எந்த ஒரு மனிதனும் எந்த நிலேக்கு ஆளாவான் என்பதைத் தயவு செய்து எண்ணிப் பார்க்க வேண்டும். தாய்மொழி, ஆங்கிலம் இந்தி இந்த மூன்றையும் தமிழர்கள் படிக்க வேண்டும் என்

பதை மத்திய அரசு தனது கொள்கையாகக் கொண்டிருக்கிறது.

இது தமிழகத்து மக்கள் வாழ்கின்ற பட்டிதொட்டிகளிலெல்லாம் நமது நண்பர்கள் சென்று எடுத்துக்காட்ட வேண்டிய விஷயமாகும்.

மும்மொழித் திட்டத்தால் இந்தியைப் படித்தால் நல்லதுதானே என்று கேட்கத்தான் தோன்றும். அதே நேரத்தில் நம்முடைய தாய்மொழி தமிழ். நாம் மும்மொழித் திட்டத்தால் இரண்டாவதாகப் படிக்க வேண்டி வருவது இந்தி, மூன்றுவதாகப் படிக்க வேண்டியது ஆங்கிலம். இந்த மூன்றையும் படித்துத் திறமையாக வருபவர்கள் ஒருவர் அல்லது இருவர் வரலாம்.

ஆனுல் அதே நேரத்தில் இந்தி பேசுகிற மாநிலத்தில் உள்ளவர்களின் தாய்மொழி இந்தி. அவர்களுக்கு மும்மொழித் திட்டம் பெயரளவுக்குத்தான். அடுத்தது ஆங்கிலம். அவர்களுடைய தோள்களிலே சுமத்தப்படுகிற சுமை ஒரேயொரு சுமைதான். ஆங்கிலம் என்கிற ஒரேயொரு சுமைதான். ஆனுல் தமிழர்களுடைய தோள்களிலே சுமத்தப்படுகிற சுமை இந்தி, ஆங்கிலம் என்ற இரண்டு சுமைகள்.

நீங்கள் எண்ணிப்பார்க்க வேண்டும். இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் ஆங்கிலத்தைப் படித்துத் திறமை மிக்கவர்களாக ஆகி நூற்றுக்குத் தொண்ணூறுபேர் திறமைசாலிகளாக ஆவார்கள். ஆதே நேரத்தில் தமிழர்கள் தமிழையும் படித்து, இந்தியையும் படித்து ஆங்கிலத்தையும் படிக்க வேண்டும் என்கின்ற நிலைக்கு ஆளாவார்கள். நூற்றுக்கு ஒருவர் வீதம்தான் திறமைசாலிகளாக வரமுடியும். அது எங்கே கொண்டுபோய் நம்மைவிடும்?

மத்திய அரசின் வேலைவாய்ப்புகளிலிருந்து மத்திய அரசின் பொதுத்துறை நிறுவனங்களிலே இருக்கிற வேலை வாய்ப்புக்கள்வரை தமிழனுக்கு வேலையே இல்லாமல் போய் விடும்.

அப்படியானுல் இந்தியை ஏற்றுக்கொண்டால் என்ன? தமிழனுக்கு இடம் கிடைக்குமல்லவா என்று கேட்கத் தோன்றும். என்ன ஆகும்? இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவன்தான் நடைபெறுகின்ற தேர்வுகள் அனைத்திலும் பெருவாரியாக வெற்றி பெறுவான். தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவன் பெருவாரியாக வெற்றிபெற மாட்டான். எனவே எதிர்காலத்திலே தமிழனுக்கு அவனுடைய வாழ்வில் இருள் கவ்வக்கூடிய சூழ்நிலை ஏற்படும். எனவேதான் நாம்

இப்போதிருந்தே திட்டமிட்டு ஆங்கிலம், அவரவர்களுடைய தாய்மொழி—ஆகிய இந்த இரண்டு மொழிகளும் போதும் என்கிறோம்.

## அண்ணா கொடுத்த திட்டம்!

இருமொழித் திட்டம், மும்மொழித் திட்டம் என்பதை யாரும் குழப்பிக்கொள்ளத் தேவையில்லை. இருமொழித் திட்டம் என்றால் இந்தியா முழுமைக்கும் இந்தியும், ஆங்கிலமும் என்று பொருளல்ல. அண்ணா அவர்கள் 1968-ல் கொடுத்த இருமொழித் திட்டம் தமிழ், ஆங்கிலம் இரண்டுந்தான். தமிழ்நாட்டுப் பள்ளிகளில் இந்திக்கு இடமில்லை என்று சொன்னதைப்போல் ஒவ்வொரு மாநிலத்திலும் அவரவர் தாய்மொழி ஆங்கிலம் இரண்டுந்தான் என்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

இந்தி மாத்திரம் வந்துவிட்டால் ஆங்கிலம் கொஞ்சம் கொஞ்சமாக மெல்ல மெல்ல அகற்றப்பட்டு விடுமேயானால் இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்குத்தான் வசதி வாய்ப்புக்கள் பெருகும். இந்தி தாய்மொழியாக அல்லாதவர்கள் இரண்டாந்தர, மூன்றாந்தர, நான்காந்தர பிரஜைகளாக ஆக்கப்படுவார்கள்.

இந்தித் திணிப்பு இல்லை; இந்தித் திணிப்பு இல்லை என்று சொல்வது வாடைக் காற்று வீசவில்லை என்று கூறிவிட்டு, ஆனாலும் கதவையும் திறந்து வை என்று சொல்வதைப்போல இருக்கிறது.

வாடைக் காற்று நிச்சயம் வீசாது, பலகணியைத் திறந்து வை என்று சொல்கிறார்கள். பலகணியைத் திறந்து வைக்கிறோம்; காற்று வீசுகின்ற காட்சியையும் காண்கிறோம்.

வாடைக் காற்று உடலைக் குந்தகப்படுத்தும். அதைப் போல இந்திக் காற்று தமிழர்களுடைய எதிர்காலத்தைச் சிதைத்து ஒழிக்கும்.

இதைப்பற்றிக் கன்னடக்காரர்கள் கவலைப்பட வில்லை; மலையாளிகள் கவலைப்படவில்லை. இதைப் பற்றி வேறு மாநிலத்தவர் கவலைப்படவில்லை. தமிழ்நாட்டில் கூடிய ஆந்திர, கேரள, கர்நாடக முதல்வர்கள் கூட மும்மொழித் திட்டத்தையல்லவா ஆதரித்துப் பேசிவிட்டுப் போயிருக்கிறார்கள் என்று யாராவது நினைப்பீர்களேயானால், நான் சொல்கிறேன், இந்தி யாவுக்கு எந்தக் கேடு வந்தாலும், எந்தத் தொல்லை வந்தாலும் முதலிலே கவலைப் படுகிற மாநிலமாகத் தமிழ்நாடுதான்

இருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். அடுத்து நமது அண்டை மாநிலத்தவர் நிச்சயமாக அந்தக் கவலைக்கு ஆட்பட்டே தீருவார்கள். மும்மொழித் திட்டத்தை அவர்கள் இன்றைக்கு ஆதரிப்பதன் காரணம், அதை அவர்கள் ஏற்கனவே ஏற்றுக் கொண்டு விட்டார்கள். காலம் கனியக் கனிய மும்மொழித் திட்டத்தால் வருகின்ற பேராபத்தை ஆந்திரம் உணரும், கேரளம் அறியும், கர்நாடகம் புரிந்துகொள்ளும். அந்த நாள் வெகு தொலைவிலே இல்லை.

ஆனால் மும்மொழித் திட்டத்தையும் ஏற்றுக்கொண்டு நாங்கள் இந்தித் திணிப்பையும் எதிர்க்கிறோம் என்பது பொருத்தமில்லாத ஒன்று என்பதை நான் சுட்டிக் காட்டாமல் இருக்க முடியாது.

ஒவ்வொரு மாநிலத்திலும் அந்த மாநிலத்தின் தாய் மொழி, ஆங்கிலம் என்ற இரு மொழித் திட்டம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். உத்தரப்பிரதேசக்காரர்கள் ஆங்கிலத்தைக் கட்டாயம் படித்தாக வேண்டும். இந்தியாவில் குமரி முதல் இமயம் வரை இருக்கின்ற மக்கள் சம வாய்ப்புக்கள் பெற்றிருக்கிறார்களா? எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்ற உங்களுடைய பேச்சு உதட்டளவுப் பேச்சல்ல, உள்ளத்திலிருந்து புறப்படுகிற பேச்சு என்பது உண்மையானால் ஆங்கிலம்தான் நீடிக்க வேண்டும்.

## ஆங்கிலம் இருக்க இந்தி ஏன்?

பேரறிஞர் அண்ணா அவர்கள் சொன்னதைக் காலையிலே அடிகளார் குறிப்பிட்டார்கள். தினகரன் ஆசிரியர் கந்தசாமி அவர்களும் குறிப்பிட்டார். 14 மொழிகளும் ஆட்சி மொழிகளாக, தொடர்பு மொழிகளாக ஆகவேண்டும் என்று குறிப்பிட்டார்கள். 14 மொழிகளும் இந்தியாவினுடைய ஆட்சி மொழியாக, பொது மொழியாக, தேசிய மொழியாக ஆக வேண்டும் என்ற ஒரு கொள்கையை மத்திய அரசு எடுக்குமேயானால், அதை நாம்தான் முந்திக்கொண்டு வரவேற்பவர்களாக இருப்போம். ஆனால், அந்த முடிவு எடுக்கப்படுகிற வரையிலே ஆங்கிலம் ஒன்றுதான் தொடர்பு மொழியாக இருக்க வேண்டுமேயல்லாமல் இந்தி தொடர்பு மொழியாக இருக்கத் தேவையில்லை. ஆங்கிலம் தொடர்பு மொழியாக இருக்கும்போது இந்தி எதற்காக இடையிலே தொடர்பு மொழி?

இந்தியை வளர்க்க வேண்டுமென்று நீங்கள் விரும்புவீர்களேயானால் உத்தரப்பிரதேசத்திலே வளருங்கள். நல்ல புலவர்களை உண்டாக்குங்கள். மத்தியப் பிரதேசத்தில் வளருங்

கள். நல்ல இலக்கியங்களையெல்லாம் உண்டாக்குங்கள். வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால், இந்தியை வளர்க்கத் தமிழ்நாட்டைக் கழனியாகப் பயன் படுத்தாதீர்கள். இந்தியைப் பரப்ப, எங்களையெல்லாம் அடிமைகளாக ஆக்க நீங்கள் அந்த முயற்சியை மேற்கொள்ளாதீர்கள்.

## தமிழர்களே தயாராகுங்கள்!

இந்த சங்கடத்துக்குக் கூட காரணம் நான் நினைக்கிறேன் நம்முடைய இந்தியத் தலைநகரம் டெல்லியாக இருப்பது ஒரு காரணம். டெல்லியைச் சுற்றியிருக்கும் மாநிலங்கள் அநேகமாக, பெரும்பான்மையாக இந்தி பேசுகிற மாநிலங்கள். இமாசலப்பிரதேசம், உத்தரப்பிரதேசம், மத்தியப்பிரதேசம் இவைகள் எல்லாம் டில்லியைச் சுற்றி இருக்கின்றன.

தயவு செய்து தலைநகரத்தை மாற்றுங்கள். மாற்றி நாகபுரியைத் தாண்டி வாருங்கள். ஐதராபாத் போல ஒரு இடத்தில் புதிய தலைநகரை வையுங்கள். பிறகு உங்களுக்குச் சங்கடங்கள் இருக்காது.

டெல்லி தலைநகராக இருக்கின்ற காரணத்தாலேதான் சுற்றி இருக்கிற மாநிலங்களில் உள்ளவர்கள் டெல்லிக்கு வந்து அங்கு புழங்கிக்கொண்டிருக்கிற காரணத்தாலேதான் உங்களுக்கு இந்தி, இந்தியாவிலே பொது மொழியாக, தொடர்பு மொழியாக ஆகவேண்டும் என்கிற தீவிரம் தோன்றுகிறது.

மத்திய அரசு தமிழ்நாட்டில் இன்றைக்கு எழுப்பியிருக்கின்ற இந்தக் குரலை மதிக்கக் கடமைப்பட்டிருக்கிறது. ஏதோ அரசியல் ஆதாயத்திற்காக யாரோ ஒரு கட்சிக்காரர்கள் பெரிதுபடுத்துகிற குரல் என்று மத்திய அரசு எண்ணி விடக்கூடாது.

மொழி காக்க—தமிழ்ச் சமுதாயத்தைக் காக்க இந்தி எதிர்ப்பு வீரர்களே! இன்று முதல் உங்களைத் தயார்படுத்திக் கொள்ளுங்கள், தயார்படுத்திக் கொள்ளுங்கள், தயார்படுத்திக் கொள்ளுங்கள்!

[ 15—8—78 அன்று சென்னையில் நடந்த இந்தி எதிர்ப்பு மாநாட்டில் தலைவர் கலைஞர் ஆற்றிய உரை.]



# பெரியார் - அண்ணா பாதையில் நடப்போம்!

பொதுச்செயலாளர், பேராசிரியர் அன்பழகன்

பெரியார் அவர்களும் பேரறிஞர் அண்ணா அவர்களும் தமிழ் நாட்டினுடைய வரலாற்றில் விடிவெள்ளியும், எழு ஞாயிறுமாகத் திகழ்கிறார்கள் என்பதை நீங்கள் எல்லோரும் அறிவீர்கள். உலக வரலாற்றிலேயே அறிவும் செயலும் ஒன்றைத் தொடர்ந்து ஒன்று உருவாகி, பல்வேறு நாடுகள் முன்னேறி இருப்பது நாம் எல்லோரும் அறிந்த ஒன்றாகும்.

அறிவுக்கான முதல் கிளர்ச்சியைப் பெரியார் அவர்கள் தோற்றுவித்தார்கள் அறிந்தவற்றைச் செயல்படுத்துவதற்கான வழி முறையைப் பேரறிஞர் அண்ணா அவர்கள் உருவாக்கினார்கள்.

சிந்திக்கிறவன் முழு அளவுக்குச் சுதந்திரமாகச் சிந்தித்து, எதை எதை அவன் உண்மை அல்ல என்று கண்டானோ அதை அடியோடு புறக்கணித்துவிட, ஒதுக்கிவிட, தந்தை பெரியார் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். பேரறிஞர் அண்ணா அவர்கள் நம்பிப் பழக்கப்பட்டவற்றை ஒதுக்க முடியாவிட்டாலும் மனிதன் முன்னேறுவதற்கான சில கருத்துக்களை ஒப்புக் கொண்டாலுங்கூட சில கருத்துக்களை தெளிவாகத் துணிந்து

முடிவெடுக்க முடியாவிட்டாலுங்கூட—சமுதாய நல்வாழ்வுக்காக அவைகளை எல்லாம் ஒத்தி வைத்துவிட்டுச் செயலாற்றுகிற முறையை எடுத்துக் காட்டினார்கள்.

எதிர்நீச்சல் என்பது பெரியாருடைய பிறப்பியல்பு. பேரறிஞர் அவர்களுக்கு எதிர்நீச்சல் என்பது ஒரு பயிற்சி மட்டுந்தான். அது அவர்களுடைய பிறப்பியல்பு அல்ல.

பெரியார் அவர்கள் சமுதாயத்துக்குக் கேடு விளைவிப்பதென்று எதைக் கருதினாலும், அதை எதிர்த்து, தகர்த்து, உடைத்துப் பார்க்கலாம் என்ற எண்ணமும், துணிவும், கொண்டவர்; பேரறிஞர் அண்ணா அவர்கள் உடைக்காமலே எப்படி அதன் பயனை — நோக்கத்தை மாற்றலாம் — அதனை நம்புவோர் உடைப்பதாக எண்ணி ஆத்திரப்பட இடமின்றி நாம் எப்படி உருமாறச் செய்யலாம் என்று எண்ணினார். அது அண்ணா அவர்களின் மன வளம் ஆகும்.

வெள்ளத்திலே எதிர்த்து நீந்துவது பயிற்சி பெற்றவர்களுக்கு எளிது என்று சொன்னாலும், சில பேருக்கு ஆர்வமான விளையாட்டு என்று சொன்னாலும், எல்லோருக்கும் இயல்வது அல்ல. பல பேர் வெள்ளத்தில் நீந்துவதாகச் சொல்லி மிதந்துவிடுவார்கள். அவர்கள் வெள்ளத்தோடு போவதும் கூட நீச்சல் என்று கருதுவார்கள். பெரியார் அவர்கள் எதிர் நீச்சல் போட்டுக் கொண்டே இருப்பார்கள். பேரறிஞர் அண்ணா அவர்கள் எதிர்நீச்சல் முறையை அடிப்படையாக வைத்துக்கொண்டு தான் போய்ச்சேரவேண்டிய இடத்திற்கு. மறு கரைக்குப் போவதற்கான பக்குவத்தைப் பின்பற்றினார்கள். எதிர்நீச்சல், எதிர்நீச்சலுக்காகவே இருக்கக் கூடாது. கரை சேருவதற்காகவும் இருக்க வேண்டும்.

எதிர்நீச்சலே அறியாத மக்கள், வெள்ளத்திலே மிதக்கிற மக்கள் போன்று, அது விதியின் பயன் என்று கருதிக் கொள்கிற மக்கள், தாங்கள் மிதந்ததே கடவுள் செயல் என்று சொல்லிக் கொள்கிற மக்கள், செயலற்ற, செயல் செய்கிற மனமற்ற, நிலைக்கு ஆளாகிற மக்கள் ஒரு தெளிவான முன்னேற்றத்தை அடியோடு இழந்துவிடுகிற காலக் கட்டத்தில் வாழ்க்கையைப்பற்றிய வழக்கமான சிந்தனையில் ஒரு எதிர் நீச்சலுக்கான மனத் துணிவையும் உண்டாக்க வேண்டியிருந்தது; அதைத் தந்தை பெரியார் அவர்கள் செய்தார்கள்.

## துணிச்சலை உண்டாக்கியவர்!

எதைப்பற்றியும் அது ஏன் என்று கேள்; எப்படி, எதனால் என்று ஆராய்ந்து பார் என்று எடுத்துச் சொல்லியே தந்தை

பெரியார் அவர்கள் அப்படிக் கேட்பதற்கான ஒரு துணிச்சலை யாவது நம்மிடத்திலே உண்டாக்கினார்கள்.

தொடர்ந்து ஆராய்வதற்கு நமக்குத் திறன் இல்லாவிட்டாலும், பேரறிஞர் அண்ணா அவர்கள் ஏன் என்று கேள், எப்படி என்று கேள், எதற்காக என்று கேள் ஆகவே இனி நாம் எப்படி நடப்பது என்று எண்ணிப்பார், அதற்கு ஏற்ற முடிவு எடுத்துக்கொண்டு செயல் செய்யப் புறப்படு; அப்படிப்பட்ட காரணங்களாலே வீழ்ச்சியுற்றுக் கிடக்கிற சமுதாயத்தை எழுச்சிபெறச் செய்வதற்கான வழிவகையைக் காண் என்று அறிஞர் அண்ணா அவர்கள் எடுத்துக்கூறி வழி கண்டார்கள்.

உள்ளபடியே அறுவைச்சிகிச்சை செய்வதும் மருந்து வைத்துக் கட்டுவதும் ஆகிய இரண்டு முறைகளையும் நீங்கள் நினைத்துக்கொண்டாலே போதும். மிகப் பெரிய கட்டி ஏற்பட்டு சீழ் வைத்து, புரையோடுகிற கட்டம் ஏற்படுகிறபோது இந்தக் காலத்திலே வேண்டுமானால் மயக்க மருந்து கொடுத்து வலி தெரியாமல் அறுக்கிற ஒரு முறை இருக்கிறது; பன்னெடுங்காலத்துக்கு முன்னே மயக்க மருந்து கொடுக்கிற அந்த வாய்ப்பு இல்லாத காலத்தில் கெட்டியாக நாலுபேர் கையைப் பிடித்துக்கொள்ள, ஒருவன் உடலைத் துணிந்து அறுத்துத் தள்ளவேண்டும்; அறுத்ததற்குப் பின்னாலே அந்த இடத்திலே புரையோடி விடாமல் இருக்க, மறுபடியும் சீழ் வைக்காமல் இருக்கச் சில மருந்துகளை வைத்து வலிக்க வலிக்கக் கட்டித் தீரவேண்டும்.

பெரியார் அவர்களும், பேரறிஞர் அண்ணா அவர்களும், பேரறிஞர்கள். பெரியார் அவர்கள் இயற்கை அறிஞர்: இயற்கை அறிஞர்கள் சொல்லுகிற கருத்துக்கள் எல்லோருடைய கருத்துக்களுக்கும் ஒத்துவருவது கடினம். அது தனியாய்த்தான் நிற்கும்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் கற்றதனாலாய அறிஞர். கற்றதனாலாய அறிஞர் சொல்லுகிற கருத்துக்கள் இயற்கை அறிஞர் சொல்லுகிற கருத்துக்களோடு ஒத்தும் போகும்; ஒவ்வாமலும் இருக்கும். ஆனால் இயற்கை அறிஞர் சொல்லுகிற கருத்தால் ஆகிய நல்ல பலனை ஏற்படுத்துவதற்கு அது தவறாது.

நியாயம் பேசுவது என்பது ஒன்று; சட்டம் பேசுவது என்பது மற்றொன்று. நியாயம் பேசுகிற காரணத்தினாலேயே நியாயம் வெற்றி பெறுவது இல்லை. சட்டம் அதற்குத் துணை

செய்தால்தான் அது வெற்றி பெறும். பெரியார் அவர்கட்கு நியாயம் தெரியும். என்றாலும் சட்டத்தைத் துணைக்கு அழைத்து அதை வெற்றிபெற வைக்கப் பெரியார் அவர்கள் அக்கறை எடுத்துக்கொண்டதே இல்லை. ஏனென்றால், பெரியார் அவர்கள் எண்ணத்தில் வெற்றி தோல்வி என்ற இரண்டும் கிடையாது.

பெரியார் அவர்களுடைய தத்துவப்படி பெரும்பான்மையோர் வாக்கு, சிறுபான்மையோர் வாக்கு, ஜனநாயகம் குடும்ப வாழ்க்கை முறைகள் இவைகளுக்கு எல்லாம் அதிக முக்கியத்துவம் கிடையாது. பெரியார் அவர்கள் சொல்லுவதை எல்லாம் செய் என்று சொல்வது இல்லை. இவைகளை எல்லாம் சொல்லிவிட்டுக் கடைசியில் பெரியார் சொல்வார்; "நான் என்னமோ பேசிஇருக்கிறேன்; அறிவு இருக்கிறவர்கள் புரிந்துகொள்வார்கள் என்று நம்புகிறேன்" என்று. இன்னொரு பக்கம் பெரியார் அவர்கள் சொல்லுவார்கள்; "நான் இருபது ஆண்டுக்கு முன்னாலே பேசியது எல்லாம் கூட இப்போது உண்மையாகிவிட்டது. ஆக இப்போது கூறுவது எதிர்காலத்திலே உண்மை ஆகும்" என்று. ஆனால் சிந்திக்காத மக்களுக்கு சிந்திக்கிற ஒரு ஆற்றலை ஏற்படுத்தியதற்குப் பெரியாரைவிட இன்னொருவரை நாம் குறிப்பிட முடியாது.

ஆனால், எல்லா மக்களுக்கும் சிந்திக்கிற ஆற்றல் சொன்னால்கூட வராது, சிந்தனை என்பது வேறு, சிந்தித்தவன் சொன்னதைத் திரும்பச் சொல்வது வேறு.

புத்தர் கூறிய அறிவுரையை, சமணர்களுடைய வழிகாட்டி ஜீனர் சொன்னதை, சாக்ரடீஸ் சிந்திக்கச் சொன்னதை, மார்ட்டின் லூதர் பேசியதை அல்லது ஆப்ரஹாம் லிங்கன் சொன்ன கருத்தை நாம் சொல்லுவதைக்குறித்துப் பேரறிஞர் அண்ணா அவர்கள் சொன்னார்கள்; 'அவர்கள் சிந்தித்துச் சொன்னார்கள். நாம் அவர்கள் சொன்னதைச் சிந்திக்கிற அளவுக்குத் திறமை பெற்றிருக்கிறோம். ஆகவே சொல்லுகிறோம் என்று சொல்லலாமே தவிர, நாமே சிந்தித்து அந்த முடிவுக்கு வந்துவிட்டோம் என்று சொல்ல முடியாது" என்று.

ஆனால் பெரும்பாலோர் தாங்களே சிந்தித்து அந்த முடிவுக்கு வந்தார்கள் என்று சொல்ல முடியாவிட்டாலும், அவர்கள் சொன்னதிலே எது சரி என்பதை தெரிந்துகொள்ளுகிற அளவுக்குச் சிந்தித்து, அந்தச் சிந்தனையிலே தங்களை ஈடுபடுத்திக்கொள்வார்களேயானால் அவர்களே இந்த நாட்டுக்குப் போதுமானது.

## வள்ளுவனையும் சாடக்கூடியவர்!

பெரியார் அவர்கள் தானே சிந்திப்பார், பிறர் சிந்தித்துச் சொன்னவை தனக்கு ஒத்துவராவிட்டால் அது சிந்தனை அல்ல என்று சொல்லவும் பெரியார் அவர்களாலே முடியும்.

வள்ளுவன் சொன்னால்தான் என்ன? இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலே இருந்தான். இன்றைக்கு இருக்கிற உலகத்தை அவன் எங்கே கண்டான்? அவனுக்கு ஜெட் விமானம் தெரியுமா? என்று கேட்டாலும் கேட்பார். பெரியார் சொல்வது அவ்வளவையும் கேட்கும்போது அவர் கேள்விகள் எற்படுத்தும் தூண்டுதல் உணர்ச்சி நம்மையும் கொஞ்சமாவது சிந்திக்க வைத்துவிடுகிறது. ஆனால் அவ்வாறு சிந்தித்து அதே முடிவுக்கு வருகிற அந்த ஆற்றல் நம்மிடத்திலே உருவாகிறதா என்றால், இல்லை என்றே கூறலாம். ஆனால் பேரறிஞர் அண்ணா அவர்கள் தானும் சிந்திக்கிற ஆற்றலைப் பெற்று இருந்தாலுங்கூட, வழிமுறையோடு பல்வேறு காரணங்களாலே மற்றவர்கள் சிந்தித்த உண்மைகளைத் தான் மேற்கொண்டு சிந்தித்து, அந்த உண்மைகளைப் பலரும் ஒப்புக்கொள்ளத்தக்க வடிவத்திலே எடுத்துக்கூறி ஒரு பொதுக் கருத்தை உருவாக்கி, அதன் மூலமாக நாம் அடைய வேண்டிய ஒரு லட்சியப் பாதையிலே நம்மை நடத்திச் செல்வதற்குப் பேரறிஞர் அண்ணா அவர்கள் முற்பட்டார்கள்.

பெரியார் அவர்கள் எத்தனையோ கருத்துக்களைச் சொல்கிறபோது சில விகல்ப உணர்ச்சியும் மாறுபாடும் ஏற்படுகிற அளவுக்குச்சொன்னாலும், அந்தக் கருத்தினுடைய உள்ளீடாக இருக்கிற பலனை மக்கள் அடையத்தக்க வகையில் பேரறிஞர் அண்ணா அவர்கள் சமூகச் சீர்திருத்தத்தை ஓரளவு பொது நோக்குக்கு ஏற்றவகையிலே உருவாக்கித்தந்தார்கள். இதற்கு நாம் விளக்கம் சொல்வதாக இருந்தால்பெரியார் அவர்கள் "கடவுள் இல்லை! இல்லவே இல்லை!! இருந்ததே இல்லை!!! இனி எப்போதும் வரவே மாட்டார்!" என்று இவ்வளவு அழுத்தமாகச் சொல்லியதை அறிவோம்.

ஆனால், அறிஞர் அண்ணா அவர்கள் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்று எடுத்துச் சொன்னார்கள்.

பலபேருக்குத் தோன்றக்கூடிய கருத்து அண்ணா கடவுளை ஒப்புக்கொண்டார்; பெரியார் கடவுளை மறுக்கிறார் என்பது தான்.

# கடவுள் பற்றி பெரியாரும், அண்ணாவும்!

பெரியார் அவர்கள், கடவுள் இல்லை, இல்லை என்று திரும்பத் திரும்பச் சொன்னதன் நோக்கம், எல்லோரும் அப்படி நம்புகிறார்கள்—நம்புவதால் தன்னம்பிக்கை இழந்து, முயற்சியையும், அறிவையும் மதிக்கமறுக்கிறார்கள்; அந்த நம்பிக்கையால் தலைவிதி தத்துவத்துக்கு அடிமையாகிறார்கள்! இந்த நிலைமையை மாற்ற வேண்டுமானால்—அவனிடம் உள்ள இந்தக் கடவுள் நம்பிக்கையையே போக்கவேண்டும் என்ற எண்ணந்தான். கடவுள் இல்லை என்பவருக்கு அதனிடத்திலே என்ன போராட்டம் என்றுகூடச் சிலர் கேட்பர். ஆனால் அவருடைய போராட்டமெல்லாம் கடவுள் இருக்கிறது என்று சொல்லுவதிலே ஏற்படுகிற பல்வேறு நம்பிக்கைகளோடுதான். அந்த நம்பிக்கைகள் சமுதாயத்தையே – சாதிப்பிரிவுக்கும் மூட நம்பிக்கைக்கும் பலியிடுகின்றன. அவற்றிலிருந்து மனிதனை விடுவிக்க – அவனது மூட நம்பிக்கையையே சோதிக்கச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தாலேயே பெரியார் அவர்கள் 'நாத்திகம்' என்று பிறர் கண்டித்தாலும் அதைப் பேசத் தயங்கவில்லை.

ஆனால் அண்ணா அவர்களோ, மக்கள் இயல்பை அறிந்த காரணத்தால், மக்களுடைய நம்பிக்கையை அடியோடு மாற்றுவது—எதிர்நீச்சல் முறையில் அவர்களை அணுகுவது எளிதல்ல; உடன்பாடு முறையிலேயே அவர்களை அணுகி, கருத்தினைத்தெளியவைப்பதே ஓரளவு வெற்றிதரும் எனறு கருதியதாலேயே ஓராயிரம் கடவுள்களை நம்பிக்கொண்டுள்ள மக்கள் 'கடவுள் ஒன்றே' ஒன்றே என்று தெளிவு பெறட்டும்—அதன் மூலம் தெய்வங்களின் பேரால் நடைபெறும் மதச் சண்டைகள் ஒழியட்டும்—வீணான குருட்டுப் பழக்கவழக்கங்கள் குறையட்டும்—சடங்குகள் தொலையட்டும் என்று விரும்பிச் செயல்பட்டார்.

ஓராயிரம் தெய்வ வழிபாடுகள் பரவியுள்ள நாட்டில்—ஒன்றேதான் கடவுள் வேறு; வேறு அல்ல; அது பெயரும் உருவும் கடந்தது—எங்கும் நிறைந்தது — அதற்கு மனிதனிலே எந்த வேற்றுமையும் உடன்பாடு அல்ல—'ஆண்டவன் முன்னிலையில் அனைவரும் சமம்' என்றெல்லாம் எண்ணச் செய்வதே 'கடவுள் நம்பிக்கை'யைப் பொறுத்து மிகப்பெரிய சாதனை என்று கொண்டார். அதனாலே தமிழ்ச் சான்றோர் பல காலமாக உரைத்துவரும் கொள்கையான "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்பதையே பறைசாற்றினர்.

அதேபோல் பெரியார் அவர்கள், "யாதும் ஊரே யாவரும் கேளிர்!" என்று சொல்வதைக் குறித்து யாருக்கும் எல்லாம் ஊர், யார் எல்லோருக்கும் சொந்தக்காரன், பண்டாரத்துக்கும், பரதேசிக்குந்தான் எல்லாம் ஊரே தவிர. நமக்கு எல்லாம் ஒரு ஊர், ஒரு இனம் என்ற கருத்தை வைத்து நாம் எல்லாம் தமிழர்; நமக்குத் தமிழரோடுதான் உறவு என்ற கருத்தைச் சொல்வார்கள். ஆனால் தமிழருக்குள்ளேயே ஊருக்கு ஊர். தெருவுக்குத் தெரு சாதிச்சண்டை இருக்கிற போது யாதும் ஊரே யாவரும் கேளிர் என்னும் கருத்து தமிழர்களுக்கு ஏற்பட்டால் தான், தமிழருக்கிடையே ஒற்றுமையாக இருப்பார்கள் என்ற காரணத்தாலேதான் பேரறிஞர் அண்ணா அவர்கள் அந்த ஊர் முதலியார், இந்த ஊர் முதலியார் என்ற தகராறு வேண்டாம்; அவனுடைய ஊர், அவனுடைய மாவட்டம், என்னுடைய மாவட்டம், என்ற வேற்றுமை உணர்ச்சிக்கு இடம் வேண்டாம்; ஒற்றுமைக்கான பக்குவம் ஏற்பட வேண்டும் என்று அதை எடுத்துச் சொல்வதன் மூலம் மனிதத் தன்மையினுடைய உயர்வுக்கு அடிகோலிவந்திருக்கிறார்கள்.

மனிதன் தன்னுடைய உரிமைகளை நிலைநாட்டுவதற்குக் கூட தன்னுடைய மனிதத் தன்மையை குறைபாடு உடையதாக ஆக்கிக் கொள்ளக்கூடாது என்பதைப் பேரறிஞர் அண்ணா அவர்கள் விரும்பினார்கள். பெரியார் அவர்கள் உரிமைக்குப் போராடுகிற நேரத்தில் இந்த மனிதத்தன்மை, மற்ற தத்துவங்கள் இவைகளை வைத்துக்கொண்டு மக்களை ஏமாறவிடக்கூடாது என்று கருதினார்கள்.

## தமிழர் தமிழர் என்றும் தமிழர்

இங்கே நண்பர் முரசொலி மாறன் பேசுகிறபோது "நான் இந்த நாட்டில் எவ்வளவு காலம் வாழ்ந்தாலும் நான் முதலில் தமிழன் இறுதியிலும் தமிழன்தான்" என்ற கருத்தை எடுத்துச் சொன்னார்.

பாராளுமன்றத்திலேகூட சென்றமுறை நான் உறுப்பினராக இருந்த காலத்தில், பாராளுமன்றத்தினுடைய தலைவர் ஒரு விளக்கத்திற்காகச் சொன்னார். "நாம் முதலில் இந்தியர்கள்; முடிவில் இந்தியர்கள் எப்போதும் இந்தியர்கள்தான்' என்று. அப்போது நான் "நாம் முதலில் இந்தியர்கள் முடிவில் இந்தியர்கள் என்று சொல்லிக் கொண்டாலும், இடையிலே நாம் மொழிவழி மக்கள் ஆகத்தான் இருக்கிறோம்" என்று சொன்னேன்.

இந்தியர்கள் என்று சொல்லப்படுகிற அந்தக் கருத்து, ஒரு அரசியல் அடிப்படையில் உருவான கருத்தே தவிர, இயற்கை அடிப்படையிலே உருவான கருத்து அல்ல. இந்தியர்கள் என்ற கருத்தோ, ஆசிய மக்கள் என்ற ஒரு கருத்தோ, பாகிஸ்தானியர் என்ற ஒரு கருத்தோ ஆட்சிமுறை அடிப்படையிலே உருவாகிய சொற்கள்.

ஒரு காலத்தில் இலங்கை இந்தியாவிலே சேர்ந்திருந்தது. இன்னொரு காலத்தில் பர்மா, இந்தியாவிலே சேர்ந்திருந்தது. வெள்ளைக்காரர்கள் ஆட்சியின் தொடக்க காலத்தில் அதே போல் நேபாளம் போன்ற பகுதிகள்கூட, இந்தியாவிலே சேர்ந்திருந்தன. அப்படிச் சேர்ந்திருந்த காலத்தில், இணைக்கப்பட்ட எல்லாப் பகுதிகளுக்கும் சேர்ந்து உருவான ஒரு பெயராகத்தான் இந்தியர் என்ற பெயர் உருவாயிற்றே தவிர, வெள்ளைக்காரனுடைய ஆட்சி இந்தியாவிலே உருவாவதற்கு முன்னாலே இந்தியர் என்ற பெயருக்கு முக்கியத்துவம் இருந்தது இல்லை. அப்பொழுது எல்லாம் ஐரோப்பியர் என்பது போன்ற முறையிலே தான் இந்தியர் என்பது வழங்கியதே தவிர, வேறு வகையிலே அல்ல. அந்த இந்தியர் எனபது இன்றைக்கு அரசியலாலே நாம் பெற்றிருக்கிற பெயர்

தமிழ்நாடு ஒரு மாநிலமாகக்கூட இல்லை என்று சொன்னாலும் நாம் தமிழர்கள்தான். தமிழ்நாடு ஐந்து நாடாகப் பிரிந்திருந்தாலும் நாம் தமிழர்கள்தான். தமிழ் நாட்டினுடைய ஒரு பகுதி கடலால் அழிக்கப்பட்டு ஒரு பகுதி தனித்துப்போய் இலங்கையிலே ஒட்டிக் கொண்டிருந்தாலும் நாம் தமிழர்கள்தான். தமிழர்கள் என்ற பெயர் நாம் பெற்றிருக்கிற அரசியல் தகுதியினாலேயே உருவானது அல்ல. சட்டத்தாலே உருவானது அல்ல; ஆளுகிற ஆட்சி காரணமாக கிடைக்கிற பெயரல்ல. நாம் பெற்றிருக்கிற வரலாற்றுச் சிறப்புக் காரணமாகக் கிடைத்த பெயர்கூட அல்ல. நாம் பிறந்தபோதே—பிறப்பிலேயே ஒட்டிக்கொண்ட பெயர்.

இப்போது அல்த, நமது முன்னோர்—உலகத்திலே மக்கள் தோன்றிய காலத்தில் தோன்றிய நமது முன்னோர் பிறந்த அந்தக் காலத்திலேயே—அவர்களுடன் பிறந்த நாகரிகம், அவர்களிடம் வளர்ந்த பண்பாடு, உருவான மொழி—கலை—இலக்கியம் அனைத்தையும் குறிக்கும் ஒரு பெயரான 'தமிழ்' மொழிப் பெயரே—'தமிழர்' எனனும் பெயராக நம்மோடு ஒட்டிக்கொண்டிருக்கிறது.

நாம் தமிழர்கள் என்பதை உணராமல் இருந்தால்தான் அது ஆச்சரியமே தவிர, நாம் தமிழர்கள் என்று சொல்லுவதோ, அல்லது மற்றவர்களுக்கு உணர்த்த விரும்புவதோ எவ்விதத்திலும் ஆச்சரியமல்ல. 'இந்தியர்'என்ற பெயர் ஏதேனும் ஒரு அரசியல் காரணத்தால்—நம்மாலேயல்ல; உலகத்திலே ஏற்படுகிற எத்தனையோ விதமான உலகப் பெரும்போர் ஏதாவது ஏற்பட்டு, சில சூழ்நிலைகள் மாறுகிற நிலைமை ஏற்பட்டால் இந்தியர் என்ற பெயர் போனாலும் போய்விடும். ஆனால் உலக வரலாற்றிலேயே நாம் சிக்கிச் சிதைந்தாலுங் கூடத் தமிழர்கள் என்ற பெயர் போகாது. அதே போலத்தான் ''வங்காளிகள்'' என்ற பெயரோ 'பஞ்சாபிகள்' என்ற பெயரோ 'மராட்டியர்கள்' என்ற பெயரோ போகாது. எனவே இந்தியாவிலே எது அழுத்தமானது என்று பார்த்தால் மக்களுடைய இயல்பான மொழியோடு ஒட்டிய பெயர் தான் மிகஅழுத்தமானதாக,தொன்மையுடையதாகநிலைத்து நிற்பதாயிருக்கக்கூடியது.

தமிழ் அழிந்தால் தவிர, தாய்மொழி அடியோடு மறக்கப்பட்டால் தவிர, ஒரு மொழி பேசுகிற மக்களுடைய அடையாளங்கள் அத்தனையும் அழிந்தால் தவிர, இது அழியாது. ஆனால் இந்தியர் என்பது அரசியலிலே மாற்றம் வந்தால்கூட அழிந்துவிடக்கூடும்.

ஆகவே, தமிழர்கள் என்று நாம் சொல்வது, அரசியல் நோக்கத்திற்காகக்கூட அல்ல, இயற்கையின் விளைவு அது! அந்த இயற்கையின் விளைவினால் நாம் தமிழர்கள், திராவிட இனத்தை சேர்ந்தவர்கள்; பெரும்பாலும் தென்னாட்டுமக்கள் திராவிடர்கள்; திராவிட இனம் என்று நான் சொல்லுகிற போது அரசியல் அடிப்படையில் எண்ணிப்பார்த்து, திராவிடர், ஆரியர் என்ற பிரிவினைக்காக நான் பேசுகிறேன் என்று நினைக்கத் தேவையில்லை.

கலப்பில்லாத மனிதன் உலகத்தில் இல்லை. எனவே கலப்பில்லாத இனம் இருக்க முடியாது; ஆனால் அந்தக் கலப்பிலே எந்தெந்த அளவுக்கு எந்தெந்த இனத்தினுடைய கலப்பு ஏற்பட்டிருக்கிறது என்று பார்த்தால் சுவாமி விவேகானந்தர் சொன்னதைப்போல், தென்னாட்டிலே வாழ்கிற பெரும்பாலான மக்கள் திராவிடக் கலை, பண்பாடு மிகுதியோடுகூடிய மக்கள்; வங்காளத்தில் மங்கோலிய திராவிட இனக்கலப்புடைய மக்கள் மிகுதி; சிந்து நதிக்கரையில் மிகுதியாக ஆரியர்-மங்கோலியர் இனக்கலப்போடுகூடிய திராவிட இன மக்கள் என்பது வடநாட்டுப் பகுதியிலேதான் உருவாகி

யிருக்கிறது. இப்படி அந்த வரலாற்று அடிப்படையில் சில பாகுபாடுகளை எடுத்துக்காட்டிச் சொல்லமுடியும்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் எழுதிய கடிதத்திலே ஓரிடத்தில் "போலிப் பெருமை தேடிக்கொள்ளவோ நாட்டின் பிறபகுதிகளைத் தரக்குறைவாகக் கருதுவதற்காகவோ அல்ல தம்பி, தமிழகத்தில் தனிச் சிறப்புக்களை நாம்அறிந்திட வேண்டும்—அகமகிழ்ந்திட வேண்டும்—எழுச்சி பெற்றிட வேண்டுமென்று நான் கூறுவது; பிற பகுதிகளும் உலகின் பல்வேறு நாடுகளும் கேட்டு இன்புறத்தக்க, அறிந்து மேற்கொள்ளத்தக்க பண்பாடு நம்முடையது; இத்தகைய கருவூலத்தை இழந்துவிடுவது நமக்கும் நாட்டிற்கும் மட்டுமல்ல; உலகுக்கே நட்டம் என்பதாலேதான் தனிச் சிறப்புக்களை நாம் நன்கு அறிந்திட வேண்டுமென்று கூறிவருகிறேன்'' என்றார். The individuality—தனித்தன்மை அவற்றினுடைய சிறப்பு இவற்றை நாம் அறிந்திட வேண்டுமென்று பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழன் உணரவேண்டியவற்றை எடுத்துச் சொன்னபோதுகூட, பிறரை வெறுப்பதல்ல, இகழ்வதற்கல்ல பிறர் இடத்திலே பகைகொண்ட நெஞ்சு காரணமாக அல்ல; ஆனால், நம்மைப் பிறர் இகழ்ந்திடாமல் இருப்பதற்காக நம்மைப் பிறர் தாழ்த்துவதற்கு வழிகோலாமலிருக்க.

ஆகவே அப்படி எண்ணிய பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழனுடைய உரிமையை எடுத்துப் பேசினாலுங்கூட, தென்னாட்டு உரிமைக்காக வாதிட்டாலுங்கூட, மனித குலத்தினுடையபொது நோக்கத்தையும் பேரறிஞர் அண்ணா அவர்கள் இணைத்துத்தான் "யாதும் ஊரே! யாவரும் கேளிர்['' என்ற தத்துவத்தை எடுத்துச் சொன்னார். தமிழன் கண்ட தத்துவந்தான் அது! ஆனால் பேரறிஞர் அண்ணா அவர்கட்கு அது இனிப்பதற்கு என்ன காரணம்? பொது நோக்கத்திலே தமிழன் தாழ்ந்தவனல்ல; இன்றைய தினமும் நாம் உரிமைகளைப்பற்றி பேசுகிறபொழுது, பொது நோக்கத்தைச் சிதைத்துவிட மாட்டோமென்று எடுத்துக்காட்ட அறிஞர் அண்ணா அவர்கள் இந்த முறையைக் கையாண்டார்கள்.

நான், குடந்தையிலே 1944-ஆம் ஆண்டு நடந்த மாநாட்டில் அறிஞர் அண்ணா அவர்கள் முன்னிலையில் பேசிக்கொண்டிருந்தபோது என்னையும் அறியாமல் ஒரு சொற்றொடர் என் பேச்சிலே வந்தது. அப்பொழுதெல்லாம் சாதிமத வேறுபாடுகளைக் கண்டித்து—தமிழ்நாட்டிலே வருணாசிரமத்தைப் புகுத்தியதைக் கண்டித்து நான் பேசுவது வழக்கம். அப்படிப் பேசி வருகிறபோது 'தமிழன் யாருக்கும் தாழான், தமிழன் யாரையும் தாழ்த்தான் என்று நான் சொன்னேன்.

அடுத்த வாரமே "திராவிட நாடு" இதழில் அதே தலைப்பில் என்னுடைய சொற்பொழிவை வெளியிட்டிருந்தார்கள். 'தமிழன் எவருக்கும் தாழான்; தமிழன் எவரையும் தாழ்த்தான்'. அது உரிமைக்குரல்; தமிழன் எவரையும் தாழ்த்தான். அது பொது நோக்கு. இந்த இரண்டு நோக்கமும் அறிஞர் அண்ணா அவர்களாலே தமிழகத்திலே தலைசிறந்து உயர்ந்தது. அப்படி உயர்ந்ததனுடைய பலனைப் பேரறிஞர் அண்ணா அவர்கள் மூலமாகத் தந்தை பெரியார் அவர்களுடைய கொள்கைக்குப் பரவலாக ஒரு ஆதரவு. எல்லாக் கொள்கைக்கும் என்று நான் சொல்லமாட்டேன். நிறைவேற்றுவதற்கு அவசியமாக இருந்த பல்வேறு தத்துவங்கட்குப் பொது மக்களுடைய பேராதரவு கிடைத்தது. அந்த ஆதரவு திரண்டு, திரண்டு 1967 ல் பேரறிஞர் அண்ணா அவர்களை ஆட்சியிலே கொண்டுவந்து அமர்த்தி வைத்தது.

இன்னும் சொல்லப்போனால் டெல்லி மாநிலங்கள் அவையில் பேரறிஞர் அண்ணா அவர்கள் பேசிய ஒவ்வொரு பேச்சும் பல்வேறு கொள்கை உள்ளவர்களாலே ஏற்றுக்கொள்ளத்தக்க அளவுக்கு உயர்ந்தது அவர்களுடைய கருத்துக்கள் அவருடைய சிந்தனையிலேயிருந்து பிறந்த எண்ணங்கள் எல்லாம் ஏன் ஏற்கப்பட வேண்டியவை ஆயின? நாமும் அதைக் கருதிப் பார்க்கவேண்டும். தன்னைச் சேர்ந்தவர்கள் ஒப்புக்கொள்வதிலே ஒருவனுடைய கருத்தும் தத்துவமும் வெற்றி பெறுவது இல்லை. தன்னைச் சேராதவர்களிடத்திலே அந்தக் கருத்தும், கொள்கையும் வெற்றிபெறச் செய்வதாலேதான் ஒருவன் உண்மையான வெற்றி பெறுகிறான் என்ற முறையில் பேரறிஞர் அண்ணா அவர்கள் வெற்றிக்கொடி நாட்டினார்கள். தந்தை பெரியார் அவர்கள் தன் மகனுக்கும் மகளுக்கும் சொல்லும் முறையில் நமக்குச் சொன்னார்கள். பேரறிஞர் அண்ணா அவர்கள் மாற்றார்களுக்கு எப்படிச் சொல்ல வேண்டுமோ அந்த வடிவம் தந்து சொன்னார்கள்.

'கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவாதஞ் சொல்' என்றார் வள்ளுவர். இக்குறளில் முதற்பகுதியில் குறிப்பது போன்று உடன்பட்ட கருத்துடையோரையும் மாறுபட்ட நினைவில்லாதோரையும்பிணிக்குமாறு பேசுவதே பெரியார் அவர்கள் இயல்பு; மற்றவர்களைப் பற்றி அதிகம் பொருட்படுத்த மாட்டார்கள். குறளில் பிற்பகுதியில் குறிப்பது போன்று கேளார்' என்று குறிக்கப்பட்ட உடன்படாத கருத்தினரையும் நிலைத்த மாறுபாடு கொண்

டோரையும் தமது கருத்துக்கு உடன்படச் செய்யுமாறு பேசுவதே அண்ணா அவர்களின் விருப்பம். அப்படிப் பேசுவதிலே தான் இலட்சிய வெற்றி உள்ளது என்று கண்டுகொண்டு செயல்பட்டவர்கள் அண்ணா.

நான் இங்கே சொன்னதைப்போல, பேரறிஞர் அண்ணாவே ஒருமுறை பெரியார் அவர்களுடைய பிறந்த நாள் விழாவின்போது இவ்வாறு எழுதினார்கள். தந்தை பெரியாருடைய அருந்தியாகம், அவருடைய உழைப்பு, அவருடைய "எதையும் தாங்கும் ஆற்றல்" இவை வேறு யாருக்கும் வராது. கோலார் தங்கவயலில் சுரங்கத்திற்கு அடியிலே சென்றால் பொன் கொண்டு வரலாம் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் அந்தப் பொன்னை வெட்டி எடுத்துக் கொண்டு வருகின்றனரே அப்படி கொண்டு வருவதிலே இருக்கிற உழைப்பும் தியாகமும் அவன் ஏற்றுக்கொள்ளுகிற மிகக் கடுமையான சோதனைகளும் சாதாரானமானவை அல்ல. அந்தப் பொன்னைக் கொணடுவருவதுபோல, பெரியார் அவர்கள் பல கொள்கைகளை வெளியிடுவார்கள். ஆனால், வெட்டிக் கொண்டுவந்து மேலே போட்டுவிட்ட உடனே, அது பொன்னாகி விடுவதில்லை.

அவற்றையெல்லாம் தூய்மைப்படுத்தி உருக்கி, வார்த்து அணிகலனாகச் செய்கிறபோதுதான், அது பொன்னாகிறது. மேலும் அந்தப் பொன்னுக்கு மெருகு தருகிறபோதுதான் பளபளக்கிறது. பொன் பொருளாகிறது, பொன் ஒரு பொருட்டும் ஆகிறது', என்று பேரறிஞர் அண்ணா அவர்கள் சொன்னார்கள். பெரியார் அவர்கள், தங்கச் சுரங்கத்துக் குள்ளே இறங்கி வெட்டி எடுத்து வருகிற வேலையைச் செய்தார். பேரறிஞர் அண்ணா அவர்கள் அதைப் பொன்னாக உருக்கி, வார்த்து அணிகலனாகச் செய்தார். இன்றைக்கு அவராலே உருவாக்கப்பட்ட அந்த அணிகலன்தான் நாட்டிலே இருக்கிறது. அந்த அணிகலன் பலபேருக்குக் கண்ணை உறுத்துகிறது அந்தப் பளபளப்பு பலராலே தாங்கிக் கொள்ள முடியவில்லை. அதிலேயும் கலைஞர் அவர்களின் புகழைப் பார்த்து, கண் கூசுகிற காரணத்தால், இவர் ஒழிய மாட்டாரா என்று கூச்சல் போடுகிற சிலர் வளர்ந்திருக்கிறார்கள். மிகவும் தொன்மையான தமிழ்ச் சமுதாயத்தில்— உணர்வு மங்கி—கட்டுக்கோப்புக் குலைவதால் ஏற்படும் விளைவு இது,

# இனி பிறக்க மாட்டார்கள்

ஒன்று பெரியாரைப்போல உழைக்கிற மனமும், துணிச்சலும் ஒரு குறிக்கோளும் இருக்க வேண்டும் இல்லையானால், பேரறிஞர் அண்ணாவைப்போல பகுத்தறிவும், ஆழ்ந்த சிந்தையும், தெளிந்த நோக்கமும், உயர்ந்த மனமும் இருக்க வேண்டும். பெரியாரைப்போல இன்னொரு பெரியார் இனி பிறக்கமாட்டார். பேரறிஞர் அண்ணாவைப் போலவும் இனி ஒருவர் பிறக்கமாட்டார். இந்த இரண்டையும் ஒவ்வோரளவில் கலந்தவர்கள் கழகத்தில் இருக்கிறோம்.

இந்த இயக்கம் இருக்கிறதே அதைக் கட்டிக்காப்பாற்றுகிற வழிமுறை நாங்கள் அறிந்த ஒன்றுதான். எங்களுடைய அறிவு எல்லா வகையிலேயும் பயிற்சி பெற்ற ஒன்றுதான். நாங்கள் சிந்திக்காத பொருளில்லை. சிந்தித்த பொருள்களைப் பற்றியே நாங்கள் திரும்பத் திரும்பச் சிந்திக்கிறோம். அப்படி சிந்திக்கப்பட்ட உண்மைகளிலே ஒன்றுதான். பேரறிஞர் அண்ணா அவர்கள் கடைசி மூச்சு வரையிலே சிந்தித்து பெரியார் அவர்கள் எடுத்துத் தந்த கொள்கை அடிப்படையில் அறிஞர் அண்ணா அவர்களுடைய அறிவில் அது உருவாகி, வளர்ந்து, குழநதையாகப் பிறந்து இருக்கிறது, "மாநில சுயாட்சி" என்ற தத்துவம். அண்ணா அவர்களுடைய கடைசிக் கடிதம், இந்த நாட்டுக்கு எழுதி வைத்த உயில் என்றுதான் சொல்ல விரும்புகிறேன்.

மாநிலத்திலே உள்ள மக்களுடைய உண்மையான நல்வாழ்வுக்கு பொறுப்பேற்றுக்கொண்டிருக்கிற மாநில அரசுதான் அந்த மக்களுடைய நல்வாழ்வுக்கான கடமைகளை நிறைவேற்றுவதற்கான எல்லா அதிகாரத்தையும் பெற்றிருக்க வேண்டும் என்று கேட்பது மாநில சுயாட்சி. மத்திய அரசுக்கு இருக்க வேண்டிய அவசியமான உரிமைகளை நாம் யாரும் கேட்கவில்லை.

# நாம் கேட்கும் மாநில சுயாட்சி

எனவே நாம் கேட்கிற மாநில சுயாட்சி என்பது இந்தியாவுக்கு உட்பட்டதுதான். இந்தியா ஒரு நாடு, முழு உரிமை படைத்த நாடு என்னும் அரசியல் சட்டத்தையே மாற்று

வது அல்ல—the Sov-r:ignty of Indian Republic—என்பதை மாற்றுவதற்கல்ல மாநிலங்கள் முழுத்தன்மையுடைய வளர்ச்சியுடையதாக வாழ்வதற்கு எது தேவையோ அவற்றைக் கேட்பது. அவற்றையும் அரசியல் சட்டத்தை மத்திய அரசு பாராளுமன்றத்தின் மூலமாக—திருத்துவதன் மூலமாக—பெறுவதற்கான நல்லெண்ணத்தை உருவாக்கவே கேட்கப்படுவது. ஆகவே, அப்படிப்பட்ட மாநில சுயாட்சியைக் குறித்து நான் முன்னாலே சொன்ன விளக்கத்தைப்போன்று—பெரியார் சிந்திக்கத் தூண்டும் வகையில் எதையும் சொல்லும் முறையில் பிரிவினை வரையில் பேசினார்கள். ஆனால் பேரறிஞர் அண்ணா அவர்கள் செயல்படுவதற்கும் நிறைவேற்றுவதற்கும் ஆனவற்றையே சொல்லும் முறையில் இந்தியாவின் ஒற்றுமை கெடாத மாநில சுயாட்சியையே கேட்டார்கள். அது நிறைவேறுகிற நாள் வரும். அது எவ்வளவு காலத்திற்குள் வரும் என்பதைத்தான் சிந்திக்கிற ஆற்றல் பெற்றிருக்கிற இளைஞர்கள் கூட்டம், தொடர்ந்து சிந்தித்து. அந்தச் சூழ்நிலையை உருவாக்க வேண்டுமென்று வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

வணக்கம்.




[சென்னை நண்பர்கள் கழகத்தின் சார்பில் 30—9—73 அன்று நடைபெற்ற பெரியார்—அண்ணா பிறந்த நாள் விழாவில் பேராசிரியர் ஆற்றிய உரை.]